உ

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# ஸ்ரீ கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி



3-2

4479




இயற்றியவர் :

"சிவநெறிக் கவிஞர்"

இராகவன்முத்து, B.Sc., Dip., Geog., C A I I B.,

(பாங்க் ஆப் இந்தியா, மதுரை-1.)

அச்சிட்டு வழங்கியவர் :

அ. மு. க. சித. மு. சிதம்பரஞ் செட்டியார்,

B.Com., (Hons)., B. L.,

காரைக்குடி-623 001.

உ

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# ஸ்ரீ கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி




இயற்றியவர் :

"சிவநெறிக் கவிஞர்"

இராகவன்முத்து, B.Sc., Dip., Geog., C A II B.,

(பாங்க் ஆப் இந்தியா, மதுரை-1.)



அச்சிட்டு வழங்கியவர் :

அ. மு. க. சித. மு. சிதம்பரஞ் செட்டியார்,

B.Com., (Hons)., B. L.,

காரைக்குடி-623 001.

# உள்ளுறை

உ

# ஸ்ரீ கற்பக விநாயகர்

(பிள்ளையார்பட்டி)



தெள்ளு தமிழ்சேர் திருவேளூர்க் கற்பகமாம் பிள்ளையார்

— பாடுவார் முத்தப்பர்

முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழுதகற்றும் முகத்தி னானை;
அற்பகத்(து) எனைஅழுத்தா ஐங்கரனை,
பிற்பவமும் அகற்றும் கோவை,
சொற்பழுது புரியாத வணிகர்குலம்
தினம்பணியும் துணைத்தா ளானை,
கற்பகத்தின் மிடியகற்றும் கற்பகமாம்
விநாயகனைக் கருத்துள் வைப்பாம்.

— கோவிலூர் ஆண்டவர்

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# முன்னுரை

உருகித் தொழுகின்ற அன்பர்களின் மனத்தகத்தே தேன்சொரிந்து வாழும் கருணைக்கடலாய் ஒளிர்பவர் கற்பக விநாயகக் கடவுள். அவர் திருக்கோயில் கொண்டு அருள் வழங்கும் பல திருத்தலங்களிலும் மிகச் சிறந்தது பிள்ளையார் பட்டியாகும். என் வாழ்வின் பாதையில் கிடந்த இடர் முட்களையெல்லாம் முற்றக் களைந்து, எனக்கு இன்பமும் செல்வமும் சுவையும் தமிழும் வழங்கி, ஆளாக்கி, வாழ்வித்த பெருமான் இக் கற்பகப் பிள்ளையார். என்னையறியாமலேயே இவர்பால் எனக்கு அளவற்ற அன்பும் ஈடுபாடும் விருப்பும் தோன்றி வேரூன்றி நாளும் பரந்து தழைத்து வருகின்றன. அவ்வுணர்வின் காரணமாக, கற்பகப் பிள்ளையாரின் வான் கருணையால் இந்நூல் முகிழ்த்தது.

பிள்ளையார்பட்டித் தலவரலாறு, கல்வெட்டுக்கள் முதலிய பல அரிய செய்திகளை மிக விளக்கமாக முன்னர், திரு. கம்பனடிப்பொடியார் சா. கணேசனார் அவர்கள் 1955ல் வெளியிட்டனர். அந் நூலில் அவர்கள் இப் பெருமான் மீது ஒருபா ஒருபது என்ற தலைப்பில் பத்து வெண்பாக்களை இயற்றிச் சேர்த்துள்ளதுடன், கோவிலூர் ஆண்டவர், கோவிந்தசாமி அய்யர், கிருஷ்ணய்யர் ஆகிய மூவரும் இப் பெருமான் மீது பாடிய பாடல்கள் மூன்றையும் இணைத்து வெளியிட்டுதவினார். அதன்முன் 1925ல் சொக்கலிங்க ஐயா அவர்கள் இப்பெருமான் மீது ஒரு பதிற்றுப்பத்தந்தாதி செய்து வெளியிட்டருளினர். அவ்விரண்டு நூல்களும்,

தேவகோட்டைச் சிலம்பணி விநாயகர் மீது வீர. லெ. சின்னய்யச் செட்டியாரவர்கள் செய்த பதிற்றுப்பத்தந்தாதி-யும் எனக்குப் பெருந்துணை செய்து வழிகாட்டின. பிள்ளையார்பட்டித் தலவரலாறு நூலைத் தந்துதவிய திரு. புலவர் நா. மீனவன், M. A., என் ஆசான் திரு. வித்துவான் தே. சொக்கலிங்கனார், M. A., B. O. L., அவர்கட்கும். கற்பக விநாயகர் பதிற்றுப்பத்தந்தாதியைத் தந்துதவிய "பாலகவி" கருப்பட்டிக்கவிராயர் அவர்கட்கும், சிலம்பைப் பதிற்றுப்பத்தந்தாதியைத் தந்துதவிய நூலாசிரியர் வழித்-தோன்றல் திரு. L. S. T. இராமனாதன் செட்டியார், M. A., அவர்கட்கும் என் நெஞ்சு நிறைந்த நன்றி.

கற்பகப் பிள்ளையாரின் கருணையுடன் என்னுள் இருந்து என்னை இயக்கியும் தோன்றாத் துணையாய் என்னை ஊக்கியும் வாழ்த்தியும் வந்த தமிழ்க்கடல் திரு. இராய. சொ. அவர்களின் ஆசிக்கும் அருளுக்கும் என்றும் கடப்பாடுடையேன்.

இறைவன் அருள்போல் இனிப்பூட்டும் தம் கவிதைத் தேன் மழையினால் என்னை அடிமை கொண்டு, மனங்கனிந்து, தாம் தலைமையேற்ற கவியரங்கங்களில் என்னை வாழ்த்தி ஊக்கம் தந்து, பாப்புனையும் ஆசையை என்னுள் வளர்த்துக் காத்த பேராசிரியர் Dr. அர. சிங்காரவடிவேலனார், M. A., B T. Ph D., அவர்கட்கு என்றும் நன்றியன்.

இந்நூலை வாழ்த்தி முருகனருள் திருநீற்றுத்திருத் தந்துதவிய அருளாடியார் திரு. சுப. பழனியப்பனார் அவர்-கட்கும், சோம்பர் வாய்வீழ்ந்த என்னைத் தூண்டி இந்நூல் நிறைவெய்தக் காரணமாயிருந்த "பொற்கிழிக் கவிஞர்" அரு. சோமசுந்தரனார்; M. A., B. T., அவர்கட்கும் நன்றியன்.

கல்லூரிப் பணியினின்று ஓய்வுபெற்றும், என்பாற் கொண்ட அன்பால், ஓய்வின்றி, முழுநேர உழைப்பால் இந் நூலை முற்றிலும் ஆய்ந்து செம்மை செய்துதவியதுடன், நூல் வடிவம் பெறவும் வாழ்த்தியும் தெம்பூட்டியும் பேணிய என் அன்பிற்கினிய ஆசான், வணக்கத்திற்குரிய பெருங் கவிஞர், 'கவிஞர்கோ' வித்துவான் பூ. அமிர்தலிங்கனார், **M.A.,** அவர்கட்கு யான் அளவற்ற நன்றியன்.

அருள்கூர்ந்து இந்நூலைத் திருக்கண் பார்வையிட்டு வாழ்த்தித் திருநீற்றுத் திருவருளிய மதுரையடிகளார், குன்றக்குடி அடிகளார் ஆகிய இருபெருந் தவச்செல்வர்களின் பொன்னடிகட்கு வணக்கம் உடையேன்.

இந் நூலைப் படித்து வாழ்த்துரை நல்கிய கம்பனடிப்பொடியார்க்கும் பேராசிரியர்கள் Dr. சுப. அண்ணாமலையார் Dr. இரா. சாரங்கபாணியார், தெ. முருகசாமி, M. A., ''பொற்கிழிக் கவிஞர்'' ச. சவகர்லால், M. A., புலவர் மீனவன், M. A., 'அருட்கவி' கு. செ. இராமசாமி, M. A. ஆகிய பெரியோர்கட்கும் பணிவும் நன்றியும் உடையேன்.

என் வாழ்விற் பல்காலும் உறுதுணையாயிருந்து வாழ்விக்கும் பெருவள்ளல், அமைதியும் அடக்கமும் இனிமையும் ஒருருக் கொண்ட தோற்றமாக இலங்கும் சீலத்தார், காரைக்குடி, உயர்திரு. அ. மு. க. சித. மு. சிதம்பரஞ் செட்டியார் B.Com., (Hons) B. L., அவர்கள் தம் வான்கருணையால் இந்நூலை அச்சியற்றியுதவிக் கற்பகப்பிள்ளையாரைத் தம் அன்பாற் பிணிக்கின்றனர். அவர்களின் கொடையுள்ளத்திற்கு என்றென்றும் தலைதாழ்த்தி நன்றிப் பெருக்குடன் வணங்கி நிற்பேன்.

கற்பகப் பிள்ளையாரின் அச்சுருவப்படம் (Block) தந்து உதவிய ''திருமுறைப் புரவலர்'' திரு. இராம. முத்துப்பழநியப்பச் செட்டியாரவர்கட்கும், குறுகிய காலத்திற் சீரிய முறையில் அச்சிட்டுதவிய மதுரை மல்லிகை அச்சகத்தார்க்கும் நன்றி.

இந்நூலை இந்த ரௌத்திரி (1980) ஆண்டு ஆவணி மாதச் சதுர்த்தி நாளில் (13—9—1980) பிள்ளையார்பட்டித் திருத்தலத்தே, கருணைமாகடலாகிய கற்பகப் பிள்ளையார் திருச்சந்நிதியில் அரங்கேற்றி வெளியிட இசைவுதவியும் பல்லாற்றானும் ஊக்கந்தந்தும் துணைநின்ற கற்பகவிநாயகர் ஆலய நிர்வாகக் குழுவினர்க்கு என் மனங்கனிந்த நன்றி.

67/68, மெ. மெ. வீதி,
காரைக்குடி-623 001;
9—9—1980.

பணிவுடையன்,

**இராகவன்முத்து.**

தொலைபேசி : 22793
தந்தி : ஆதீனம்

மதுரைத் திருஞானசம்பந்த
சுவாமிகள் ஆதீனம்
70, தெற்கு ஆவணி மூல வீதி
மதுரை-625 001
நாள் : 13—6—1980

உ

திரு. இராகவன்முத்து, பி.எஸ்சி, (டிப்ளோமா புவியியல்)
67-68, மேனு மேனு தெரு
காரைக்குடி-623 001
முகவை மாவட்டம்

# வாழ்த்துரை

மெய்யன்புடையீர்,

தங்கள் அன்பு மடல் கிடைத்து ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருக்கண் பார்வையிட்டு அகமிக மகிழ்ந்தார்கள்.

வெண்பா அந்தாதி அரியதோர் படைப்பாக அமையும் என்பதில் ஒரு சிறு துளியேனும் ஐயமின்று. அமிழ்தினும் இனிய நம் தாய்மொழி ஆகிய தமிழ்மொழி, கவிதை இலக்கியங்களையே தனக்குத் தவழ்ந்து விளையாடும் முற்றமாக அற்றைய காலந்தொட்டு இன்றுவரை கொண்டுள்ளது. குழவிப்பருவத்தில் கிலிகிலியாடும் விளையாட்டையொப்ப

உருவாகி வரும் கவிதைகள் தமிழ்த்திருத் தெய்வங்களாகிய விநாயகருக்கும் முருகருக்கும் அன்ருடம் உவப்பளிப்பன. நேரில் தங்கள் கவிதைப் பொழிவினை அனுபவித்துக் களிபேருவகையடைந்த நமது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தங்கள் வாழ்வில் நலங்களனைத்தும் உண்டாக எல்லாம்வல்ல ஸ்ரீ மீனுட்சிசுந்தரேசப் பெருமானையும் ஞான சம்பந்தப் பெருமானையும் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிருர்கள்.

அருளாணையின் வண்ணம்

(ஒப்பம்)

ஆதின மேலாளர்

உ
சிவ சிவ

தவத்திரு
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி-623 206
இராமநாதபுரம் மாவட்டம்
தொலைபேசி (தனது)
காரைக்குடி 215
குன்றக்குடி 27

நாள் : 22—6—80

# வாழ்த்துரை

காரைக்குடி ''சிவநெறிக் கவிஞர்'' திரு. இராகவன் முத்து அவர்கள் இயற்றிய கற்பக விநாயகர் வெண்பா அந்தாதியில் பல பாடல்களைப் படிக்கும் இனிய வாய்ப்புக் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி.

கற்பக விநாயகர் இடுக்கண்களைத் தீர்க்கும் இறைவனன்றோ? அவரை வழிபடும் தெய்வமாகக் கொண்ட கவிஞர் ''இல்லாமை இங்கொன்றும் இல்லாமல்'' (43) செய்யக் கவிதையை ஓதுகின்றார்; நம்மையும் ஓத ஆற்றுப்படுத்துகின்றார். கவிதைகள் இனிய தமிழில் எளிய முறையில் அமைந்திருக்கின்றன. நாள்தோறும் பாராயணம் செய்வதற்கும் நினைவில் இருத்தி நினைப்பதற்கும் உரியனவாய் அமைந்துள்ளன. பலரும் படித்துப் பயன்பெற வாழ்த்துகின்றோம்.

சிவநெறிக் கவிஞரின் முயற்சிகள் வெற்றி பெறுக! அவ்வழி வையகம் இன்புறுவதாக !

வாழ்த்துக்கள்.

இன்ப அன்பு,

(ஒப்பம்) அடிகளார்

22—6—80

ஓம்

கம்பனடிப்பொடி
சா. கணேசன்

கம்பன் மணிமண்டபம்
காரைக்குடி-623002

# வாழ்த்துரை

ஒன்பது நகரக் கோயில்களுள் பிள்ளையார்பட்டியும் ஒன்று. காலத்தால் முந்திய கோயில் இது. முற்காலப் பாண்டியர் காலத்தில் தோன்றிய இஃது ஒரு குடைவரைக் கோயில். இங்கு புடைஓவியமாக விளங்குவார் விநாயகப் பெருமான்.

படிமக்கலை வரலாற்றுப்படியும் அங்குக் காணப்பெறும் தாமிழி எழுத்தின் அமைதிப் படியும் இக் குடைவரைக் கோயிலின் காலம் கி. பி. இரண்டு அல்லது மூன்றும் நூற்ருண்டை ஒட்டியது எனலாம்.

இப் பிள்ளையாரின் பெயர் கல்வெட்டுக்களின்படி. "**தேசி விநாயகப் பிள்ளையார்**" என்பதாகும். 'தேசி' என்ருல் வணிகர் என்பது பொருள். எனவே தேசி விநாயகர் என்ருல், வணிகப் பெருமக்கள் வழிபடும் மேலான தலைவன் என்பதாகும். ஆனுல் தற்பொழுது கற்பகப்பிள்ளையார், கற்பக விநாயகர், கற்பகமூர்த்தி என்ற பெயர்களே பெருக வழக்காய் உள்ளன.

இப் பெருமானிடம் தீராக் காதல்கொண்டவர் கவிஞர் இராகவன்முத்து அவர்கள். அக்காதலின் விளைவே இந்த நூல். கற்பக விநாயகர் மீது பாடப்பெற்ற வெண்பாக்கள் அந்தாதித் தொடையாக அமைந்த காரணத்தால், "கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி" என்று பெயர் பெறுகின்றது.

ஆசிரியர் முறையாகத் தமிழ் பயின்று நெறியாக வளரும் இயல்பை வெண்பாக்கள் நன்கு புலப்படுத்திக் கொண்டிருக்கின்றன.

இயற்சீர் வெண்டளையும் வெண்சீர் வெண்டளையுமே வெண்பாவுக்குரியவை. ஈற்றடி இறுதிச்சீர் நாள், மலர்; காசு; பிறப்பு என்னும் ஏதாவதொன்றால் அமையவேண்டும். பிற சீர்களும் தளைகளும் வெண்பாவுக்கு உரியனவன்று. எனவே, வெண்பா இயற்றல் சிறிது சிரமமானதொன்று. எனவே, வெண்பாவை யாப்பு வகைகளில் தலையாயது என்பர் முன்னையோர்.

அத்தகு யாப்பில் அந்தாதித் தொடையாக நூறு பாடல்கள் ஆக்கிய கவிஞரை மனமாரப் பாராட்ட வேண்டும். பாடல்களும் வளமாக அமைந்து கற்போருக்கு இன்பம் பயப்பனவாக உள்ளன. ''இன்னும் பல பாக்களை ஆக்கித் தமிழ்த்தாய்க்கு அணி சேர்க்க முழுமுதற் பரம் பொருள் அருள்க!'' என மனமார வாய்மணக்கக் கவிஞரை வாழ்த்தி மகிழ்கிறேன்.

இங்ஙனம்

கம்பன் அடிப்பொடி

''கவிஞர்கோ''
**வித்துவான் பூ. அமிர்தலிங்கன், M. A.,**

5, இந்திரா நகர்
இரண்டாம் தெரு
காரைக்குடி-623 001
*1—8—1980*

# வாழ்த்துப்பா

1. ஞான விநாயகர்க்கு நல்வெண்பா அந்தாதி
மோனராக வன்முத்து முற்றுவித்தான்—தேனருவி
பத்திச்சிற் றூருகப் பாய, அதில்மூழ்கிச்
சித்தம் குளிர்ந்தோம் சிறந்து.

2. வெண்பாவால் அந்தாதி ஆக்கி, விநாயகர்க்குப்
பண்பால் படைத்தளித்த பாவலனும்—நண்புமிகு
முத்துக் கவிவாழ்க ! மூவாத் தமிழ்வாழ்க !
உத்தமனாய் வாழ்க ! உயர்ந்து.

3. பிள்ளையார் பட்டிப் பெருமான் கழல்போற்றி
உள்ளுருகிப் பாடும் உயர்முத்தே!—அள்ளூறும்
அந்தாதி நூல்வாழ்க ! அன்பு மனம்வாழ்க !
செந்திருவும் சேர்க செழித்து.

(ஒப்பம்) பூ. அமிர்தலிங்கன்

*1—8—80*

**டாக்டர் சுப. அண்ணாமலை,**
B. O. L. (Hons)., M. Litt. Ph. D.
முதல்வர் & தமிழ்த்துறைத் தலைவர்
தியாகராயர் கலைக் கல்லூரி
மதுரை-9.

உ

# அணிந்துரை

நண்பர் இராகவன்முத்து அவர்கள் யாத்த "கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி" என்ற நூலைப் படித்து இன்புற்றேன். இக் கவிஞரின் சொல்வளம் பாராட்டற்குரியது. பாடற்கரிய வெண்பா யாப்பை இவர் எளிதிற் பணிகொள்கின்றார். இவர்தம் இறையன்பும் தமிழன்பும் பாடல்களில் விளங்குகின்றன. அணிநயம் ஆங்காங்கே மிளிர்கின்றது.

அன்பர்கள் கற்பக விநாயகரை வழிபடுங்கால் பாராயணம் செய்தற்கேற்ப இந்நூற் பாடல்கள் எளிமையாக அமைந்துள்ளன.

இக் கவிஞர் 'பாடும் பணியில்' மேன்மேல் உயர்ந்து திருவருளுக்கு ஆளாக அங்கயற்கண்ணி அம்மையை இறைஞ்சுகின்றேன்.

1—7—80
மதுரை.

(ஒப்பம்) சுப. அண்ணாமலை

**டாக்டர் இரா. சாரங்கபாணி,**
**M.A., M.Litt., Ph. D.,**

தமிழ்த்துறைத் தலைவர் &
முதுகலைத் தமிழ்ப் பேராசிரியர்
அழகப்பர் கலைக் கல்லூரி
காரைக்குடி-3

4, கல்லூரிச்சாலை
செக்காலை
காரைக்குடி-2
நாள் 15—8—80

# வாழ்த்துரை

பிள்ளையார்பட்டிப் பெருவாழ்வாகிய கற்பக விநாயகர் குறித்துப் பாவிற் சிறந்த வெண்பாவால் ஓர் அந்தாதி இயற்றியுள்ளமையைச் ''சிவநெறிக் கவிஞர்'' இராகவன்-முத்து என்னிடம் தெரிவித்து, ஒரு வாழ்த்துரை வேண்டினர். அவர்கள் கல்லூரியிற் பயிலும் காலத்திருந்தே தமிழில் மிக்க ஆர்வமும் முனைப்பும் கொண்டு கட்டுரை, கவிதை முதலிய போட்டிகளிற் கலந்துகொண்டு பல பரிசுகள் பெற்றுச் சிறந்தவர். அன்னார் அத் தமிழார்வத்தை வங்கியில் வேலையில் அமர்ந்த பின்னும் இடையருது பேணிப் போற்றிச் சிறந்த கவிஞராகத் திகழுதல் கண்டு மகிழ்கின்றேன்.

இவ் வந்தாதியில், ''சிவபெருமான் நரியைப் பரியாக்கித் திருவிளையாடல் புரிந்தார். அப் பெருமானின் திருமகனுய நீயும் உரிமையால் அத் திறமையை எய்தி என் மனக்குரங்கை மாற்றித் தூய்மையாக்குக'' என வேண்டும் பாடல் (4) நயஞ் சான்றது.

''உன்றன் கழலென் உயிர்'' (46)
''களிப்பூட்டும் உன்றன் கழல்'' (47)

இன்னணம் அமைந்த ஈற்றடிகள் மோனைச் சிறப்புடனும் கருத்தாழத்துடனும் சிறப்பாக அமைந்துள்ளன. கற்பக

விநாயகர்தம் கைகளின் சிறப்பை எம்மால் ஏத்த இயலுமோ? என வினவும் கவிஞர், வினா நடையிலேயே அதற்கியையக் "காகிதப்பூ ஊறுமோ தேனைநனி உள்?" (57) என உவமையைக் கையாண்ட திறம் பாராட்டற்பாலது.

விநாயகர் கைகளின் சிறப்பைக் கூற இயலாது என அவர்தம் பெருமையும் தம் அடக்கமும் தோன்றக் கூறிய ஆசிரியர், சொன்னயமும் பொருணயமும் பொதுளக் கைகளின் சிறப்பைக் கவினுறச் சித்திரித்துள்ளார்.

"இன்பம் தருகை இசைசேர் துதிக்கையால்
துன்பம் துடைக்கை தொலையாத—அன்பால்
வழங்குகை குன்று மழைக்கையுடை யான்சீர்
முழங்குகைஎன் வாழ்க்கை முறை." (56)

தருகை, துடைக்கை, வழங்குகை, முழங்குகை எனக் கைகளின் தொழில்களைக் கையீற்றுத் தொழிற்பெயர்களாற் சுட்டுதல் இலக்கணம் பயின்றார்க்கு நூனயம் தருவதாம்.

இங்ஙனம் சொன்னயமும் பொருணயமும் சிறக்கவும் அணிநலம் நிறையவும் பல பாடல்கள் அமைந்துள்ளன. இறையன்பின் வெளியீட்டான் மலர்ந்த இக் கற்பகவிநாயகர் வெண்பா அந்தாதியை அன்பர்களும் அன்புடனும் ஈடுபாட்டுடனும் ஓதி இன்பமுறுவார்களாக. "சிவநெறிக் கவிஞர்" எனப் பாராட்டுப் பெற்றுள்ள திரு. இராகவன்முத்து இன்னும் பல நூல்களை இயற்றிச் சிவநெறியோடு தமிழ் நெறியையும் பேணி வளர்க்க இறைவன் அருள்பாலிப்பானாக!

(ஒப்பம்) இரா. சாரங்கபாணி

15—8—80

தொலைபேசி } நிறுவனர் 245
முதல்வர் 287

நலம் பொலிக !

# இராமசாமி தமிழ்க் கல்லூரி

(மதுரை காமராசர் பல்கலைக் கழக இணைவு)

நிறுவனர், தலைவர்: இராம. பெரி. பெரியகருப்பன் செட்டியார்
செயலர் : பெரி. மெய்யம்மை ஆச்சி
முதல்வர் : தெ. முருகசாமி, எம். ஏ., பி. ஓ. எல்.,
காரைக்குடி-623 001

நாள் : 17—7—80

உ

1. கற்பக நாயகர்க்குக் கன்னித் தமிழ்மொழியில்
அற்புதமாய்ச் செய்திட்டார் அந்தாதி—நற்பதமாய்
நாளும் கவிசொல்லும் நல் "இராக வன்முத்தை"
ஆளும் தமிழே தமிழ் !

2. தமிழென்று சொல்லித் தருகின்ற நூலை
அமிழ்தென்று எண்ணிப் பருக—அமிழ்கின்ற
தாய்வயிற்று வாழ்வைத் தகர்க்கின்ற கற்பகத்
தூய்தமிழந் தாதி கதி.

3. கதியென்று கற்பகத்தை நாடினுர்க் கென்றும்
பதிபுகழ நல்வாழ்வுண் டென்று—அதிமதுரத்
தீந்தமிழில் நற்கவிஞர் தீட்டியஅந் தாதியினல்
நாம்பெறுவோம் நல்லதொரு காப்பு.

அன்புள்ள,

(ஒப்பம்) தெ. முருகசாமி
முதல்வர்

"பொற்கிழிக் கவிஞர்"
அரு. சோமசுந்தரன், M. A., B. T.,

123, முத்துப்பட்டணம்
[illegible] தெரு
காரைக்குடி-623 001




உ

# அணிந்துரை

1) நல்ல தமிழாலே நம்மிராக வன்முத்து
சொல்ல விநாயகர்சீர் சோபிக்க — வெல்லமெனும்
கற்பகத்தைப் பாடிக் கவிஞர்ந்த அந்தாதி
அற்புதமாய்ச் செய்தான் அணி.

2) அணியாகச் செய்தான் அவன்பாடி நாளும்
பணியாக நின்று பரவ—மணியாக
வந்திடுக தேவே ! வளங்கள் இவனுக்குத்
தந்திடுக நின்தாள் சரண்.

(ஒப்பம்) அரு. சோமசுந்தரன்
17—6—1980

**புலவர் நா. மீனவன், M. A.,**
தலைமைத் தமிழாசிரியர்
இராமநாதன் செட்டியார் மேல்நிலைப் பள்ளி
புதுவயல்
23, கண்டனூர்ச்சாலை
காரைக்குடி-623 001

1) பூவிருக்கும் திருமகளைப் பொன்மார்பில்
ஏந்துபிரான் புனித மூர்த்தி
புகழ்பூத்த திருமால்பின் போந்தகொடி
பூவுலகைக் காக்கும் கன்னி

சேவிருக்கும் பெருமானை இடங்கொண்ட
கண்ணாட்டி செல்வப் பிள்ளை
செழித்தவரை மேருவினில் சீர்த்திமிகு
பாரதத்தை எழுதி வைத்தோன்

நாவிருக்கும் தமிழ்பாடி நடந்துவரும்
பாவலர்க்கே நலங்கள் கூட்டும்
நல்லபுகழ்க் கற்பகத்தை வெண்பாவில்
நடனமிட வைத்த மேலோன்

ஆவிருக்கும் பால்மனத்தான் அணியிராசு
வன்முத்து நூறு பாடல்
அணிமாலை சூட்டியவன் கணபதிதன்
அருளாலே களித்து வாழ்க.

2) கல்லாமை அகற்றியவர் சிந்தனையில்
கவியாகி நின்ற மூர்த்தி
கற்பகத்தின் பொற்பதத்தைக் கவின்தமிழில்
வெண்பாவில் கட்டி வைத்தோன்

நில்லாமை கண்டுலகில் ஞானமழை
சிந்தியவர் நேயத் தோடு
நிகழ்த்திவைத்த தத்துவங்கள் அத்தனையும்
நெஞ்சேற்றி உணர வைத்தே

இல்லாமை அகலவென இதயத்தால்
மிகமகிழ்ந்தே இயற்றி வைத்த
இராகவன்முத் தென்னுமுயர் எழிற்கவிஞன்
இன்பமுடன் இனிய பாட்டில்

சொல்லாமற் சொல்லிவைத்த பொருளுணர்ந்தோர்
சொற்றமிழின் திறஞ்சு வைப்பார்
சுகங்கோடி நனிபெற்றுச் சுற்றமெலாம்
சூழ்ந்திருக்க இனிது வாழ்க.

(ஒப்பம்) நா. மீனவன்

பொற்கிழிக் கவிஞர்
**ச. சவகர்லால்,** எம்.ஏ., பி.டி.,
தமிழ்த்துறை

ஆறுமுகம் பிள்ளை
சீதையம்மாள் கல்லூரி
திருப்புத்தூர்-623 211
இராமநாதபுரம் மாவட்டம்

# வாழ்க !

1) பணிசெய வங்கி கொண்டான்
பதமுடன் கவிதை யென்னும்
கனியினைக் கையிற் கொண்டான்
கற்பனை ஏவல் கொண்டான்
துணிவுடன் வெண்பா யாப்பில்
துவங்கியே பாடல் நூறும்
அணிநயங் கொண்டு செய்தான்
ஆற்றலை வியந்தேன் நானே.

2) எந்தவோர் செயலும் இங்கே
இனிதுற வேண்டில் நாம்தாம்
முந்தியே பிள்ளை யாரின்
முன்புபோய் வணங்கி நிற்போம்
அந்தவோர் பிள்ளை தன்னை
அழகுற வெண்பாக் கட்டில்
வந்தனை யுடன டக்கி
வந்தவன் இந்த முத்து.

3) பாவினிற் பத்தி விஞ்சும்
பயத்தொடு பாடு கின்ற
நாவினிற் பிறந்த தாலே
நயத்தொடு கவிதை கொஞ்சும்
பூவினில் இதழ்கள் நன்கு
பொருந்திய பான்மை போலப்
பாவினில் சொற்கள் சேர்ந்து
பயின்றிடல் கண்டேன் ! வாழ்க !

(ஒப்பம்) ச. சவகர்லால்

4479
Δ2.11(ய)



உ
சிவமயம்
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை

அருட்கவி
**கு. செ. இராமசாமி, M. A.,**
தமிழ்த்துறை, மன்னர் கல்லூரி,
சிவகங்கை-623 560

15, சிவன் கோவில்
தெற்குத் தெரு
சிவகங்கை-623 560

# வாழ்த்து

(1) வெண்பா விருத்தப்பா வேண்டும்பா எந்தப்பா
பண்பா அனைத்தும்நீர் பாடும்பா;—நண்பா,
தொடையழகைச் சொல்வேனு,
சொல்லழகுப் பாட்டின்
நடையழகைச் சொல்வேனு நான்!

(2) கனிமுத்து வாடும்; கடல்முத்து மங்கும்;
பனிமுத்துக் காய்ந்துவிடும் பாரில்—நினையுங்கால்
சொல்முத்தே என்றும் சுடர்வீசும்; முத்தையா,
நல்முத்தே தந்தீர் நயந்து.

(3) கணுத்தோறும் சென்று கலந்தே குருதி
அணுத்தோறும் மேனி அளாவும்—மணித்தமிழால்
யாண்டுமவ் வாறே இராகவன் முத்துபுகழ்
பூண்டுலகில் வாழி பொலிந்து.

(ஒப்பம்) கு. செ. இராமசாமி

உ
சிவமயம்
ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# நூற் கொடையாளர் வாழ்த்து

(1) சீருதவும் கற்பகத்தைச் செந்தமிழிற் பாடும்நூல்
ஊருலவ அச்சிட் டுதவினர் — காரனைய
வண்மைச் சிதம்பரனர் செல்வ வளமுயர்ந்து
மண்மிசையில் வாழ்வார் மகிழ்ந்து.

(2) திருவால் அறிவுயர்வால் சீலத்தார்; போற்றற்(கு)
உரிய பெருவள்ளல்; உள்ளம் — பெருமைச்
செருக்கடையாச் செல்வர் சிதம்பரனர் தம்மை
விருப்புறுமே செல்வி விழைந்து.



உ

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# ஸ்ரீ கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி

## காப்பு

காப்புக் கடவுளெனக் கண்பார்க்கும் கற்பகமே!
பாப்புகழின் வெண்பாவால் பார்புகழ்நின்—சீர்ப்பரப்பைக்
காட்ட முனையுமென் கன்னி முயற்சிக்கும்
கூட்டும் துணையாகிக் கூடு.

உ

சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# ஸ்ரீ கற்பக விநாயகர் வெண்பா அந்தாதி



## நூல்

### (1) திருப்பள்ளி எழுச்சி (1—20)

1. சீரோங்கு செந்தமிழச் செட்டித் திருநாட்டிற்
பேரோங்கு காரைப் பெருங்குடியின்—சாரோங்கும்
பிள்ளையார் பட்டிப் பெருவாழ்வே! கற்பகமே!
பள்ளி எழுவாய் பரிந்து.

2. பரிந்து மிகவுழைத்துப் பாரெங்கும் கோயில்
தெரிந்து முறையாகச் செய்ய—விரைந்தமக்கள்
நாளும் பணிகின்ற நாயகனே! பள்ளியெழுந்(து)
ஆளஇவண் வாராய் அமைந்து.

3. அமைதி கிடைக்கா(து) அலைகின்றேம் நெஞ்சச்
சுமையகற்றி வாழ்வில் சுவைகள்—அமைவாக்கும்
பிள்ளாய்! கருணைப் பெருக்கால்யாம் வாழ்ந்துய்யப்
பள்ளி எழுவாய் பரிந்து.

4. பரியாய்க் குறுநரியைப் பண்டொருநாள் தாதை
அரிதாகச் செய்திறத்தை அண்ணல்! — உரிமையால்
பெற்றெம் மனக்குரங்கைப் பிள்ளையுன் போலாக்க
விட்டெழுவாய் பள்ளி விரைந்து.

5. விரைசெறி பூங்கொடிகள் வீங்குநீர் வாவிக்
கரையில் தலையசைத்துக் காதல்—உரையின்றி
உன்னடிகள் போற்ற உவந்திருக்கும் கற்பகமே!
துன்னியுடன் நீப்பாய் துயில்.

6. துயிலும் பொழுதும்யாம் தூமறைகள் நாவிற்
பயிலும் பொழுதினிலும் பல்லூண்—அயிலும்
பொழுதும் மறவாதுன் பொன்னடியை நாளும்
தொழுதிடவே நீப்பாய் துயில்.

7. துயில்வான் புரக்கும் தொழிலுடையான் என்றும்
பயிலரவில் பாற்கடலிற் பார்த்து! — மயலறுத்தே
மக்களைக் காப்பதற்கே மாப்பிள்ளை கற்பகமே!
இக்கணமே பள்ளி எழு.

8. எழுவாய் பயனிலை என்றென்றும் ஓதார்
விழிநீர் பெருக்கி விருப்பால் — தொழுதுன்றன்
பேர்சொல்லின் வாக்கிற் பெருங்கவிகள் ஈபவனே!
சேர்துயிலை நீப்பாய் சிறந்து.

9. சிறந்து தமிழ்கேட்ட சிரடியார் நம்பி
மறைந்த திருமுறைகள் வேண்ட — விரைந்தவற்றை
ஈந்தருளும் கற்பகமே! எங்கள் குலம்வாழப்
போந்திடுவாய் பள்ளிவிட்டுப் போது.

10. போதொடு பச்சிலையும் புண்ணியப் பேராறும்
காதலாற் கொண்டுன்னைக் கால்பணியும்—பேதையர்
நன்மணம்பெற்(று) உய்ய நயந்துதவும் கற்பகமே!
இன்முகத்தாய்! பள்ளி எழு.

11. எழுங்கதிர்போல் வீசி எழில்மேனி காட்டும்
பழம்பொருளே ! பாட்டிசொலும் பாட்டில் —
குழைந்தவளை
வெற்பகத்தில் உய்த்தோய்! விநாயகனே ! பள்ளியினை
இப்பொழுதே நீப்பாய் இனிது.

12. இனிப்பு முதலான இன்சுவைகள் ஆறும்
நுனித்தறிந்த தன்றி நொடியும் — தனித்திருந்தே
உய்யத் திருமுறைகள் ஓதேமைக் கண்விழித்தே
ஐயாநீ காப்பாய் அணைத்து.

13. அணையின் சுவையும் அறற்கூந்தல் மங்கை
பணைத்தோள் நலமும் பயின்றே—துணையைத்
தனிவழிக்கே தேடத் தவறினேற்காய்ப் பள்ளி
இனியவனே நீப்பாய் இவண்.

14. வண்மைத் திருவுருவாய் வாரணம்நீ நெஞ்சிருந்து
தண்மையே பெய்தாயுன் தாள்போற்றி—உண்மை
அமுதத் தமிழால் அருச்சித்தோம் ! தூங்காக்
குமுத முகங்காட்டிக் கூடு.

15. கூடும் திருவாலும் குன்றுத மெய்யாலும்
பாடும் தமிழ்மாலைப் பண்பாலும் — நாடியுன்
பொன்னடிக்கே ஆளாவேன் பூமணக்கும் கற்பகமே !
இன்னேநீ பள்ளி எழு.

16. எழுந்தெனக்(கு) இவ்வுலக இன்பங்கள், செல்வம்,
தொழுந்தகைமைப் பண்பு, சுவைஞர்—குழைந்துருகப்
பண்ணிசைக்கும் ஆற்றல் பரிசெல்லாம், கற்பகமே !
மண்மிசையே ஈவாய் மகிழ்ந்து.

17. மண்ணில் நிறைவாய் மகிழ்ந்திருக்கும் காலத்தில்
எண்ணம் செருக்கற்றே என்றென்றும் — பண்சேர்
தமிழ்ப்பாட்டால் உன்னழகுத் தாள்போற்றத் ஐயா
~~கற்பகமே~~ !
அமிழ்தளித்து நீப்பாய் அணே.

18. அணையாத் திருவிளக்காய், அற்புதப் பாட்டாம்
இணையில்லாப் பால்முழுக்கால் என்றும் —
துணைப்பாதம்
போற்றிடுவேன் ஞாலப் புகழெய்தக் கற்பகமே
மாற்றிடுவாய் பள்ளி மகிழ்ந்து.

19. மகிழ்வே எவர்க்கும் மனத்தும் புறத்தும்
முகிழ்க்க எனுமெண்ணம் மூண்டு—நிகழ்த்தும்
அருளுலகில் நிற்க, அடியவர்தம் நெஞ்சத்(து)
இருளகற்ற ஐயா எழு.

20. இயைந்திங்கே பள்ளி எழுந்தருளிப் பிள்ளாய் !
நயந்தெமக்கே யீந்தாய் நலங்கள் ! — வியந்து
திரைகடல்மேல் ஓடித் திசையெல்லாம் யாண்டும்
செறியவே செய்வமுன் சீர்.

## (2) போற்றி மாலே (21—40)

21. சீர்பூத்த கற்பகமே ! தேவி உமையவளின்
பேர்பூத்த வள்ளால் ! பெருவயிற்ருய் ! — நேர்பூத்த
கொம்பொடித்துப் பாரதத்தைக் கூர்ந்தெழுதும்
அன்பதனே
நம்பக்கல் ஈவாய் நனி.

22. நனிதுயரம் உற்றேம்! நலிந்து தளர்ந்தோம்!
இனியேனும் இன்னல் இரியப் — பனிமாற்றும்
செங்கதிராம் நற்றுணைச் சேர்ந்திட்டோம்! கற்பகமே!
இங்கினியென் இன்னல் எமக்கு?

23. எமக்கினிய வாழ்வுதவும் ஈசன் துணையாம்
உமைக்கினிய மைந்தா! உலகம் — அமைத்தவனே!
கற்பகமே! எம்மைக் கடைத்தேற்றக் கட்கடையாம்
நற்கருணைப் பேறெமக்கு நல்கு.

24. நல்லுடம்புப் பேறும் நலத்திளமை வாழ்வுடனே
மல்குமனைத் தேட்டம் மலர்ந்துவரும்—சொல்லமுதப்
பாட்டிற் பலிதமுடன் பல்சுவையும் கற்பகமே!
கூட்டிடுநீ சீராய்க் குளிர்ந்து.

25. குளிர்ந்த மனத்துடனே கொள்கை நிறைவால்
தெளிந்த அறிவும் திருவும்—அளிந்த
கனிபோல் கவிவரவும் கற்பகமே யீவாய்!
நினைவாய்த் தொழுவோம் நினை.

26. நினைந்துன் கழலிணைக்கே நேயம் தழைத்துப்
புனைந்த தமிழேற்ற பொன்னே! — முனைந்த
செயலெல்லாம் வெல்லச் செகமெல்லாம் போற்றத்
தயவெனக்குக் கற்பகமே தா.

27. தாதாநீ என்றலைவோம் தாளாத ஆசையால்!
ஏத்தாய் வினையிழைத்துச் சோர்ந்தோமால் — நாதா!
இனியுன்றன் தாள்பற்றி யீடேறும் வண்ணம்
கனிவெமக்குக் கற்பகமே காட்டு.

28. காட்டு வழிக்குள்ளும் காவல் புரியவரும்
கோட்டுப் புகர்முகத்துக் கோமானே ! — நாட்டம்
உனதடிக்கே வைத்தேன் ! உளத்தினிலே தோன்றும்
கனவுநன வாகக் கருது.

29. கருத்தும் கருத்தில் கனிவேறித் தோன்றும்
பெருத்த சுவைப்பாவும் பேச்சும் — பருத்த
திருவயிற்றுக் கற்பகமே ! தித்திக்கும் உன்பேர்
உருவியற்றி வந்த உயர்வு.

30. உயர்ந்த மலைவிட்டை உன்தம்பிக் கீந்து
நயந்து குளக்கரையில் நாளும் — இயைந்தமரும்
கற்பகமே ! கண்ணின் கடையெனக்குக் காட்டிவிடு !
பொற்கவியாற் பூக்கும் புகழ்.

31. புகழுக்கும் பொன்னுக்கும் பொங்கிப் பெருகும்
தமிழுக்கும் வாயூறித் தாளில் — அமிழ்துபெற
வீழ்ந்தெழுவேன் கற்பகமே! வெற்றித் திருவுடனே
வாழ்ந்திடவே யீவாய் வளம்.

32. வளமீந்து காப்பவனே ! வாரணமே ! நெஞ்சக்
களமேறும் மாயக் களையை — முளையில்
அறக்களைந்தே உள்ளிருக்கும் ஆணவத்தைக் கல்விச்
சிறக்கும் சிவநெறியிற் சேர்.

33. சேர்த்திடுவாய் என்றனையும் செஞ்சொற் கவிஞனென!
பார்த்திடுவாய் தீரப் பழவினைகள் ! — சீர்த்தமிழை
நாளும் பணிவுடனே நான்பயின்று பாட்டிசைக்கக்
கோளின் நிலைமாற்றிக் கூடு.

34. கூடிநந்தாய் கோமானே ! கூட்டின் நலமென்றும்
வாடாத வண்ணம் வளர்ந்துவரப் — பீடார்ந்த
மெய்ப்பொருளே ! என்பால்நீ மேவிடுவாய் !
உன்பணிக்கே
எப்பொழுதும் ஆவேன் இனி.

35. ஆளாக்கி அன்பால் அழகேற்றிப் பொன்மேனி
வேளாக்கி வைத்திட்ட வித்தகனே ! — தாளாத
வண்மை முதற்குணங்கள் வந்து குடியிருக்கும்
பண்பாளன் ஆக்கிக்கண் பார்.

36. பார்புகழும் தெய்வப் பனுவல் பலகோடி
ஊர்மகிழச் செய்தே யுயர்வன்யான் — கூர்வேலன்
வள்ளி நலனுகர வாழ்வீந்த வள்ளால்! நீ
துள்ளித் துணையாகித் தோன்று.

37. தோன்றும் பெருந்துணையும் தோன்றாத் துணைவலிவும்
ஈன்றுள் எனும்பரிவும் என்நெஞ்சில் — ஊன்றிக்
கொலுவிருக்கும் கற்பகத்துக் கோமானே ! வாழ்வில்
நலிவகற்றி யீவாய் நலம்.

38. நலமெதுவும் எய்தாமல் நல்குரவே கண்டேன் !
பலவகையாந் துன்பங்கள் பட்டேன் ! — குலதெய்வக்
கற்பகமே! காப்பாய்! கழலிணைகள் கைப்பிடித்தேன்!
நற்சுவையே காண்பேன் நனி.

39. நனிமகிழ்ந்தே உன்பொலிவை நாளும் தொழுவார்
வினைமுழுதும் தீரும்; வெளுத்த — மனம்பெறுவர்;
மாண்புறுவர் என்ற மதிப்பீட்டை யாம்பெறவே
காண்பாயெம் பாட்டுக் கவின்.

40. கவிஞர் தமிழாற் கதிபெறவே எண்ணிச்
சிவனார் மகனழகு செப்பும் — நவமாலை
வாயார ஓதி வருவாரைக் கற்பகமே!
தாயாகித் தாங்கிடுவாய் தான்.

## (3) திருவடி (41—50)

41. தானற்ற நெஞ்சத் தடத்தில் மலருமுன்
தேன்பெற்ற ஞானத் திருவடியை — வானவரும்
வண்டாகிச் சுற்றி வளம்பெற்று வாழ்வதனால்
கொண்டாடி நின்றோம் குளிர்ந்து.

42. குளிர்ச்சி நிலவுக்கும் கூரொளியால் காயும்
எழுச்சி கதிருக்கும் ஈந்தாய் !—தழைத்துவரும்
பத்தியினால் யாம்படைக்கும் பாமாலை ஏற்றுமையாள்
புத்திரனே ! ஈவாய் புகல்.

43. கல்லும் கவிசொல்லக் காவியங்கள் தாம்வளர
இல்லாமை இங்கொன்றும் இல்லாமல் — நல்ல
திருவளர நாளும் திருவடித்தேன் பெய்யும்
ஒருகை முகன்பேரே ஓது.

44. ஓதும் திருஞான வுண்மை யுணர்ந்துகொள
வேதத் திருவடியில் வீழ்ந்தோமால் — ஈதல்
அறஞ்செய்யத் தூண்டும் அருள்சுனையாம் உன்தாள்
திறஞ்சொல்லி வாழ்வோம் தினம்.

45. தினவெடுத்த தோள்வலியால் தீதே இழைத்தார்
மனமுருகிப் போற்ற மலர்ந்து — வினைகெடுத்துச்
சூதிழைத்த செல்வச் சுகத்தைப் பிறர்க்காக்கும்
பாதமலர் உச்சிப் பதி.

46. பதிபெறவே ஏங்குகிற பாவையரும் நல்ல
கதிபெறவே எண்ணிக் கசியும் — மதியினரும்
என்றும் வலம்வரவே எண்ணியவை கைகூட்டும்
உன்றன் கழலென் உயிர்.

47. உயிருட் கலந்துறைவாய்! உண்மை கலங்கின்
தயிரிற் கரந்திருக்கும் தண்நெய்ப் — பயன்போல்
வெளிப்போந்தே அன்பர் விழுமம் துடைத்துக்
களிப்பூட்டும் உன்றன் கழல்.

48. கழல்காண எண்ணிக் கடுந்தவங்கள் செய்யேன்
அழல்மேனி எம்மான் அளித்த — மழகளிற்றுக்
கோமானே! நாளும் குழைந்துன்பேர் வாழ்த்துமிப்
பாமாலைக் கீவாய் பதம்.

49. பதமற்ற நெஞ்சிற் பழவினைகள் மூண்டு
விதவிதமாய்த் தொல்லை விளைக்கச் — சதமென்றுன்
தாள்பற்றி நாளும் தமிழ்சொல்லி வாழ்வதனால்
நீள்துயரம் இல்லை நிலத்து.

50. நிலத்தில்வாழ் போதும் நெடுவான் இடத்தும்
கலத்தில் கடல்கடக்கும் காலும் — உலப்பில்
கலையார் திருவடியைக் கைப்பிடித்தேன்! உன்தாள்
தலையிருத்தி யீவாய் தரம்.

### (4) திருமேனி (51—55)

51. தரமுயரும் பொன்னும் தமிழ்க்கடலார் நெஞ்சும்
பரமன் பவழநிறப் பாங்கும் — கரவாமல்
சேர்ந்துகலந் தொன்றித் திருமேனி யாய்விளங்க
நேர்ந்ததுவோ நின்றன் நிறம்?

52. நிறஞ்சிவந்த பேற்றூல் நிகரற்றேம் என்றே
மறஞ்செய்து வாழும் மனிதர்க்(கு)—அறஞ்செய்ய
எண்ணுங்கார் மேகத்(து) எழில்நிறத்தைக்
காட்டுதற்கோ
வண்ணம் கருத்திருந்த வாறு ?

53. ஆற்றின் புனலும் அருள்மேனி மீதுற்ற
பேற்றூல் நிலத்துட் பிளவிருந்தே—ஊற்றெடுக்கும்
தேனுய் வரக்கண்டேன் ! நீதற்றே இவ்வுலகும்
வானுய் விளங்கமனம் வை.

54. வைப்புநிதி ஏதும் வழங்கவில்லை என்பெற்றேர் !
எய்ப்பென்னை இங்கே இடருறுத்த —
மெய்ப்பொருளாம்
ஆனைமுக வள்ளாலுன் அன்புத் திருவுருவால்
நானடைந்தேன் கோடி நலம்.

55. நலமற்று வாடி நலிந்தாரும் ஞானக்
கலைவடிவ மாகிக் கருணை—அலைகொழிக்கும்
ஆனை முகக்கடலை அன்பால் தொழுதிட்டால்
ஈனவினை யோடும் இளைத்து.

## (5) திருக்கைகள் (56—60)

56. இன்பம் தருகை இசைசேர் துதிக்கையால்
துன்பம் துடைக்கை தொலையாத — அன்பால்
வழங்குகை குன்று மழைக்கையுடை யான்சீர்
முழங்குகைஎன் வாழ்க்கை முறை.

57. முறையால் கழல்வணங்க முத்திநலம் ஈயும்
மறைமுதலாம் ஐங்கரத்தின் மாண்பைக்—
குறையறிவால்
கூற முனைந்திட்டால் கூடுமோ ? காகிதப்பூ
ஊறுமோ தேனதனை உள் ?

58. உள்ளம் நலிவுற்ற ஊனர்களும் நேருற்று
வள்ளல் திருக்கரத்தால் வானமுதம்—கொள்ளும்
பரிசதனைக் கேட்டேன்! பரங்கருணைக் காளாய்
வரிசைபெற நின்றேன்நான் வந்து.

59. வந்தவர்க்குக் கோடி வரிசையும் வாராதே
சிந்தைக்குள் நின்னைச் சிறையிட்டுச் — செந்தமிழால்
பாடிப் பரவிநின்ற பாட்டிக்கு வானுலகும்
ஈடின்றி ஈந்தாய் இயல்பு.

60. இயல்பாய் வளமெல்லாம் எய்த உதவி
மயலறுக்கும் மீனுள் மகனே! — செயல்கூட்டும்
செங்கைத் திறங்கண்டு சேவித்தேன்! என்வாழ்விற்
பொங்கிடுமே என்றும் புகழ்.

(6) திருமுகம் (61—65)

61. புகழும் மறைநான்கும் பூரணமாய்ப் பொங்கித்
திகழும் திருமுகத்துத் திங்கள் — மகிழ்வால்
உமிழ்கின்ற ஓங்காரத்(து) உள்ளொளியால் உள்ளம்
அமிழ்துண்ணல் உன்றன் அருள்.

62. அருளே நறுமணமாய் அன்பே மலராய்த்
திரள்கனியாய் வேதம் திகழ — இருள்சேர்
கருவொழிக்கும் மெய்ஞ்ஞானக் கற்பகத்தின் ஆனைத்
திருமுகமே சேர்க்கும் திரு.

63. திருமுகங்கள் ஐந்தால் திருவெழுத்(து) ஐந்தின்
பொருளுணர்த்தும் ஈசன் புதல்வா! — மருளகற்றும்
ஆனை முகக்கதிரால் அன்பர் மனக்கமலம்
தேனவிழச் செய்வாய் தினம்.

64. தினம் பார்த்துன் வேழத் திருமுகச்சீர் சொல்வேன்!
முனம்புரிந்த தீவினைகள் முற்றும் — இனங்கொண்டு
போயொழிய நாளும் புதுமைக் கவிபாடும்
வாயிலெனப் பெற்றேன் வகை.

65. வகையறியேன் வாழ; வளமார் நிதியின்
தொகையறியேன்; வாழ்வில் துலங்கும் — நகையும்
மிகவறியேன்; கற்பகமே! மீதூரும் ஆசை
முகையினுக்கும் பூப்பாய் முகம்.

(7) ஊர்தி (66—70)

66. முகம்பெருத்துக் கண்சிறுத்த மூத்ததிருப் பிள்ளை
அகங்குளிர நோக்கி அடியார்க்(கு) — இகஞ்சுவைக்க
ஊர்ந்துவரும் தேரே! யான் உன்போல் எலியாகித்
தாழ்ந்திடவும் செய்வேன் தவம்.

67. தவமின்றிச் சொக்கன் தனிவிளக்கைத் தூண்டிப்
புவியில் அரசாளும் போதே — நவநிதியப்
புன்மை தவிர்த்துப் புகர்முகனைத் தாங்குதற்கே
என்னதவம் செய்தாய்? இயம்பு.

68. புகழ்தவழும் கற்பகத்தின் பொன்னுடலைத் தாங்கும்
திகழ்தவத்தாய்! வீட்டில் தினமும் — மகிழ்வுடனே
எம்முணவை யுண்டே யிடரிழைக்கக் கண்டாலும்
உம்மினத்தைத் தீண்டேம் உவந்து.

69. வந்திதரும் பிட்டுக்கே வாயூறும் ஈசனருள்
தொந்திக் கணபதிக்குத் தொண்டெலியே! — உந்தன்
வளைகாக்கும் பேற்றை வழங்கிவிடு! நானும்
சுளையாகக் காண்பேன் சுகம்.

70. சுகங்கண்டே இந்திரனுய்த் தொல்லுலகில் வாழும்
தவங்கொண்டார் பெறும் தகுமோ? — அகமலர்ந்து
நானுதவும் கற்பகத்தைத் தாங்குபெரும்
பேற்றெலியுன்
வான்பெருமை ஒவ்வும் வகை.

(8) இடம் (பிள்ளையார்பட்டி) (71—75)

71. வகையறிந்து செல்வம் வளர்த்ததனை என்றும்
தொகையளந்து துய்த்தே தொகுத்த—மிகையிறைக்கே
எங்கெங்கும் வைக்கின்ற ஏழு நகரத்தார்
தங்களிடம் கற்பகமே தங்கு.

72. கற்பகத்துப் பிள்ளையார் காசினியில் தங்குதற்கோர்
வெற்பகத்தைக் காண விரும்பியே—பொற்புநிலை
குன்று மருதங் குடியதனை யாராய்ந்து
சென்று குடிகொண்டார் தேர்ந்து.

73. தேர்ந்த மலைக்குகையின் சிற்பச் சிலைவடிவம்
ஆர்ந்த கலையுலகின் அற்புதங்காண்! — சேர்ந்த
மருதங் குடியீசர் மாமகனுர் என்றே
மரபுணர்ந்தார் தேர்ந்தார் மதித்து.

74. தேரும் விருந்தும் திருமடத்து மாண்பதுவும்
பாரிலிப் பிள்ளையார் பட்டியைப்போல்—சேர்ந்திருந்தே
இன்பூட்டக் கண்டாரரார்? எல்லாமெம் கற்பகத்தான்
தன்பதத்தால் ஆன தகவு.

75. தகவுடைய மூவர் தமிழ்ப்பாடல் பெற்றுத்
திகழும் சிவத்தலங்கள் எல்லாம்—புகழ்படைத்த
மாயன் பதிகளுடன் மாண்பிணைந்தும் ஆற்ருவே
கோயிலாய்க் கற்பகங்கொள் குன்று.

### (9) தேவியர் (சித்தி புத்தி) (76—80)

76. குன்றுக் குடிக்கருகில் கோயில் மலைக்குகையில்
என்றும் இருப்பவனே ! எம்மனையில்—உன்றன்
மனையாராம் சித்திபுத்தி மாதருடன் வந்தே
இணைப்பாதம் வைப்பாய் இசைந்து.

77. இசையும் மனத்தால் இனிமையெலாம் கூட்டிப்
பசைபோல் மனமிளக்கும் பாவை—திசையெல்லாம்
சிர்விழியால் ஈர்த்தருளும் சித்தியுடன் கற்பகமே !
சேர்வுறுவாய் சிந்தை செறிந்து.

78. சேரும் இனிமையினால் சித்தம் களிகொண்டே
நேர்மை [illegible]மயங்கி நெறிகெட்டுச்—சீரழிந்து
போகாமல் காத்தருளப் புத்தியெனும் தேவியுடன்
ஓகையுடன் வாவா உவந்து.

79. வார்சடையான் தந்த வளரொளியின் கற்பகமே !
தார்கொன்றைத் தந்தை தமிழ்முருகன்—கார்மாமன்
போலிரண்டு பெண்பெற்றாய் ! புத்திசித்தி தாமருளும்
காலம் இணங்கக் கருது.

80. இணங்கி வளஞ்சொரிந்த எங்குலத்துத் தெய்வம்
மணங்கொள் இருவர் மலர்த்தாள் — வணங்கிநின்று
கற்பகத்தை வாழ்த்தும் கவிசொன்னேன் ! பாமாலை
கற்பவர்க்கும் உண்டாம் கவின்.

### (10) திருவருள் (81—85)

81. கவினார் தமிழ்கேட்டுக் கன்ம வினைபோக்கிப்
பவமாம் வலையறுப்பான் ! பாரில்—தவிசிந்து
பேணிவருங் கற்பகத்தான் பேரருளைப் பேசிவிட
வாணிக்கும் உண்டோ வழி ?

82. வழியில் அமுதளிக்கும்; வாய்மைச்செந் நாவில்
பிழிதேன் கவிமணக்கப் பேணும்; — இழிவகற்றும்;
பொன்றாப்பே ரின்பப் புகழ்சேர்க்கும்; கற்பகத்தான்
நன்றாம் அருளின் நலம்.

83. நலம்வளரும் வாழ்வில்; நலிவகலும்; வானத்
தலம்வளரும் கற்பகத்தின் தண்பேர்—வலமுயரக்
கொண்டெழுந்த கோமான் கொடைசெய் திருவருளால்
உண்டாகா தென்றில்லை ஒன்று.

84. ஒன்றாய் உலகிருக்க ஓங்கல் மிசையறத்தை
நன்றாய்த் திருக்கொம்பால் நாட்டுவித்துக்—குன்றா
இசைகொண்ட கற்பகத்தான் இன்னருளால் நோக்கும்
திசையெல்லாம் வாழும் திரு.

85 திசைநோக்கி நொண்டி தினம்நடக்க, ஊமை
இசையேற்றி இன்பமுறப் பாட — வசைக்கே
பிறந்தாரும் ஈந்துயரப் பேரருள்செய் பிள்ளாய் !
சிறந்தேறும் பாட்டெனக்கே சேர்.

### (11) திருத்தசாங்கம்—புகல் (86—95)

86. சேர்ந்தேன் நின்னடியைச் சிந்தை குடிகொண்டு
வாழ்ந்திருப்பாய்! யானும் வளர்சுவைப்பா-வேந்தாய்
இலங்கிவரக் **கற்பகமாய்** ஈந்தருளும் **பேராய்** !
துலங்கிடுவாய் இன்னே துணை.

87. துணையாரும் இல்லை ! துயர்க்கடலின் மீட்கும்
புனையாய் அருளும் புகழோய் ! — இணையில்லாத்
தெய்வத் தமிழ்நாட்டைச் சீர்மணக்க ஆள்பவனே !
எய்யாமற் காப்பாய் எனை.

88. கார்போல் தமிழ்முழங்கும் காரைக் குடியூரின்
ஓர்பால் உகந்தே உலகாளும் — சீராளா !
பிள்ளையார் பட்டிப் பெருமானே ! எம்முள்ளக்
கள்ளங்கள் நீக்கிக் கல.

89. கலந்தாய்நீ கற்பகமே ! கன்மவினை யெல்லாம்
நலிந்தோடிப் போயினவே நாளும் !—வலிந்தென்றும்
பெய்யும் அருள்நதியால் பேருலகை உண்பிப்பாய் !
பொய்யகற்றி யீவாய் புகழ்.

90. புகழ்சேர் பெருமலையாய்ப் போந்தவனே ! ஊர்தி
இகழ்சேர் எலியெனினும் ஏற்றாய் ! — மகிழ்ந்தேறி
வெற்பகத்தின் உச்சியிலும் வீற்றிருக்கும் கற்பகத்தின்
பொற்பதங்கள் என்தலைமேற் பூ.

91. பூத்தநால் வேதப் புகழ்மலையின் உச்சியிலே
ஏத்தும் ஓங்கார இன்னிசையாய் ! — வாய்த்த
மனங்கொண்டார் போற்றுமுதல் மந்திரமே !
என்றன்
இனந்தழுவ எம்மை இணை.

92. இணையற்ற கற்பகமாம் எந்தாய்!இவ் வாழ்வில்
துணையற்று நின்று துவண்டே — கணைமலரால்
ஈனஞ்செய் காமன் இடர்ப்பகையை மாற்றுதற்குன்
ஞானப் படையெமக்கு நல்கு.

93. நல்கும் திருவருளால் நாட்டின் நலிவகற்றிப்
பல்கும் புகழ்முரசால் பாலிப்பாய் ! — மல்கும்
திருப்பெயரை ஓதும் சிறியேற்கும் வாழ்வில்
உருப்படியாய் ஏதும் உதவு.

94. உண்மை மனம்போல் ஒளிர்கின்ற **தும்பைப்பூங்**
**கண்ணி** யுவந்தேற்குங் கற்பகமே! — தண்மை
**அறுகம்புல் மாலை**யினை அன்றலர்ந்த பூவின்
நறுமணமாய்க் கொண்டாய் நயந்து.

95. துன்பம் செலவாகத் தோப்புக் கானத்தால்
இன்பம் வரவாக எப்பொழுதும் — அன்பருளி
**வெற்றிக் கொடி**நாட்ட விறளித்துக் காக்கின்ற
கற்பகமே யுன்கழலே காப்பு.

### (12) திருப்பல்லாண்டு (96—100)

96. உலகத்தைக் காக்கின்ற உன்மாமன் ஆற்றல்
பலமடங்கு கூடப் பரிந்து — நலமருள்வாய்!
பூமணக்கும் கற்பகமே! பூந்தமிழாற் பல்லாண்டு
நாமணக்கச் சொன்னோம் நயந்து.

97. நாடிவந்த விக்கினங்கள் நாளும் விலக்கியெமைப்
பீடுபெறச் செய்த பெருமானே! — தேடும்
அமிழ்தத்தை யேந்தும் அருளாளா! அன்புத்
தமிழுரைப்பேன் பல்லாண்டு தான்.

98. தானம் தவமோங்கத் தன்னலத்துப் பேயழிய
வானம் மழைவழங்க வாழ்விற்கொள்—ஈனமதி
காணுமற் போகவருள் கற்பகமே! பல்லாண்டு
மாணுறவே சொல்வேன் மகிழ்ந்து.

99. மகிழ்ச்சி தருவாய்! மனக்கவலை மாற்றும்
புகழ்ச்சிக் கவிதருவாய்! பொன்னே! —
இகழ்ச்சியிலா
நன்மனத்தாற் பல்லாண்டு நாடோறும் பூசையிலே
உன்னடிக்குச் சொல்வேன் உவந்து.

100. உவந்துநான் உள்ளுருகி உன்செவியில் ஓதும்
கவியமுதம் உண்டுமகிழ் கண்ணே! — புவியாளும்
ஒப்பில்லாக் கற்பகமே! உன்னடிக்குப் பல்லாண்டு
செப்புதலால் எய்துகிறோம் சீர்.

* * *

## நூற்பயன்

(1) சீர்பூத்த கற்பகத்தின் சேவடிகள் நெஞ்சிருத்திப்
பார்பூத்த பத்திப் பசுந்தமிழை — ஆர்வமுடன்
நல்மனத்தால் ஓதும் நலமுடையார் எல்லாரும்
செல்வரென வாழ்வார் சிறந்து.

(2) சீர்மணக்கும் வெண்பாவாற் செந்தமிழில் அந்தாதி
பார்வணங்கும் கற்பகத்தான் பாதமலர்க்(கு) —
ஏர்துலங்கும்
நேரிசையாய்ப் பாடி நெகிழ்ந்திட்டேன் என்வாழ்வில்
சீரிசையும் சேரும் சிறந்து.



# குறிப்புரை

(காப்பு) கூட்டும்—"காதல் பொருளனைத்தும் கைகூட்டும்"

பாடல் 1. சார்—பக்கம்.

4. தாதை—தந்தை.

5. விரை—நறுமணம்; வாவி—குளம்.

6. அயிலும்—உண்ணும்; ஊண்—உணவு.

7. மயல்—மயக்கம்.

10. போது—மலர்; அறுகு—அறுகம்புல்.

11. பாட்டி—ஔவை; வெற்பகம்—(கயிலை) மலை.

13. அணை—மலரணை, பஞ்சணை; பணை—பருத்த.

22. இரிய—நீங்க.

24. தேட்டம்—செல்வம்

25. அளிந்த—சுவை நிறைந்த; நினை—உன்னை.

27. தாதா—கொடைஞன்.

28. கோட்டுப் புகர் முகம்—தந்தம் இருக்கும் யானை முகம்.

47. விழுமம்—துன்பம்.

48. மழகளிறு—இளமையான யானை.

49. சதம்—பற்றுக் கோடு.

50. கலத்தில்—கப்பலில்; உலப்பு—குறைவு.

75. தகவுடைய மூவர்—தேவார ஆசிரியர் மூவர்.

78. ஒகை—உவகை.

83. வானுலகில் இருக்கும் கற்பகமரத்தின் வறுமையைத் தீர்த்து அதனை ஆட்கொண்டு வாழ்வளித்த வெற்றியின் சின்னமாக அப்பெயரைத் தான் கொண்டு "கற்பகப் பிள்ளை" என இவர் பெருமையாய் விளங்குகிறார். வலம்—வெற்றி.

84. ஓங்கல்—(மேரு) மலை; அறம்—மகாபாரதம்.

நாற்பயன் (2) ஏர் துலங்கும்—அழகு விளங்கும்.

KOVILOOR MADALAYAM

---

மல்லிகை பிரிண்டர்ஸ், மதுரை-1. • போன் : 25080